# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

## துன்முகி - மார்கழி - 2016 - டிசம்பர்

54.



23.12.2016 அன்று நடைபெற்ற நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் முதல் பட்டமளிப்பு விழாவில் அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர் உரையாற்றும் காட்சி மேடையில் கோவிலூர் சுவாமிகள் மற்றும் கல்லூரி முதல்வர், துறைத்தலைவர்கள்.

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி - மார்கழி - 2016 - டிசம்பர்     இதழ் - 54

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

தென்பொதிகைச் சந்தனத்தின் நறுமணத்தில்
திளைத்தெழுந்த திகழ்மணத்தை வாரி உண்டு
தெய்வநிலை கொண்டதிரு நெல்லை யெனும்
திருநாமம் கொண்டவளாய்த் திகழும் தாயே
மன்பதைக்குக் காவலென மாநிலத்தில்
வந்தவள்நீ சாம்பவியே மணியே எங்கள்
மாதனமே மதுரைநகர்க் கரசியென
மாணிக்க முடிகவித்த மாதே வண்ணப்
பொன்பதித்த சுந்தரனை மருவுகிற
பொற்கொடியே அற்புதமே கழனி வாயில்
பொருந்துமிள நகையாளே அரவணிந்தான்
போற்றுதிரு நெல்லையெனப் பூத்த தாயே
உன்பதியாம் கொற்றவனை உளங்கொண்ட
உத்தமராம் சாதுக்கள் உள்ளந் தேடி
உவந்துவரும் உத்தமியே அணிமயிலே
உன்னடியில் தலைவைத்தோம் உவந்து காக்க.

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

பயம், அச்சம், பிராந்தி, தயக்கம் ஆகியவை யாவும் உடல் சார்ந்தவை. குறிப்பாக மனம் எனும் அந்தக்கரணம் சார்ந்தவை. வீரம், தீரம் என்பன பொதுவாக உயிர் சார்ந்து, அதிலும் குறிப்பாக தீரம் என்பது ஆன்ம பலத்தைச் சார்ந்தது.

உடல் வலுவைக் கொண்டு ஒருவருடைய செயல்பாடுகளையோ அல்லது அவருடைய தைரியத்தையோ அளவிட முடியாது. தைரியம், வீரம் என்பது அச்சமில்லா இடத்திலேதான் ஒளிபெற முடியும். யார் ஒருவர் தேவைகளைக் குறைத்துக் கொண்டு அடுத்தவருடைய தயவை நாடாமல் இருப்பார்களேயானால் அவர்களுக்கு எந்த விதத்திலும் அச்சம் தோன்றுவதில்லை. அச்சத்திற்கு அடிப்படைக் காரணமே அதீத ஆசைகளும், விரும்பத்தகாத நடத்தைகளும் தான். அஞ்சி அஞ்சிச் சாவார் என்று பாரதி சொன்னது போல எதற்கெடுத்தாலும் அச்சம் தயக்கம் ஏற்படுமேயானால் எந்த ஒரு செயலையும் சரிவர முடிக்க முடியாது.

முழுமையாக அறிவற்ற மனிதன் உலகில் இல்லை. எல்லாவற்றிலும் பூரண அறிவைப் பெற்றவரும் உலகில் இல்லை. அதே போல எதற்கும், எப்பொழுதும் அஞ்சாத பூரணமான தைரியம் பெரும்பாலும் மனிதர்களுக்கோ, மிருகங்களுக்கோ இருப்பதில்லை. ஆனால் அதே நேரத்தில் விருப்பு, வெறுப்புகள் அற்று எந்தப் பொருளிலோ, புகழிலோ ஆசையில்லாத ஒரு ஞானிக்கு ஒப்பான மனிதனுக்கு அச்சம் என்பது ஏற்படுவதே இல்லை. அதே போல, செயல்களைத் தைரியத்துடனும் வீரத்துடனும் செய்வதற்கு உயிரின் சார்பு (ஆன்ம பலமே) தேவை.

உதாரணமாக, பெரியபுராணத்தில் திருக்கூட்டச் சிறப்பு என்னும் பகுதியில்

கூடும் அன்பினில் கும்பிடலேஅன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார் - (திருக்கூட்டச் சிறப்பு 8)

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே என்ற தொடருக்கு மேலும் விளக்கம் கூறுகிறார் பட்டினத்தார். வேதங்களின் உட்பொருள் மண்ணாசையைக் கைவிடுக; அடுத்துப் பெண்ணாசையைக் கைவிடுக என்பதே. இதனைக் கூறியவன் ஞானங்களைப் போதித்த பெருமானின் மொழியை நெஞ்சமே நீ கேட்டிலை; யாம் செய்த புண்ணியத்தால் சூரியன் ஒளியையும் சந்திரன் ஒளியையும் நாம் பெறுகின்றோம். அப்படி இருக்கக் காதற்ற ஊசி கடைசிவரை வரும் என்பது எப்படி?

*வேதத்தின் உட்பொருள் மண்ணாசை மங்கையை விட்டுவிடப்*
*போதித்த வன்மொழி கேட்டிலை யோ? செய்த புண்ணியத்தால்*
*ஆதித்தன் சந்திரன் போல வெளிச்சம் அதாம்பொழுது*
*காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே.*

நம்முடன் வந்தவற்றில் எவைஎவை எங்கெங்கே நின்று விடும்? என்பதை விளக்குகிறார் பட்டினத்தார். எது நிலையானது? என்பதைத் தொகுத்துப் பேசுகிறார்.

விரும்பிவந்த மனையாள் ஈன்றெடுத்த மக்கள், வாழும் வாழ்க்கை, சேர்த்த செல்வம் இவையெல்லாம் தன் வீட்டு வாசல் வரையே. தன்னுடைய சுற்றம் முதலியன சுடுகாடு வரையே. நாம் செல்லும் வழிக்குத் துணை நாம் செய்த தினையளவு புண்ணியம். தவம் முதலிய இவை அனைத்தையும் நாம் செய்திருந்தால் பரலோகம் நமக்குக் கிடைக்கும். இது சத்தியமான வாக்கு என்பது பட்டினத்தார் பாட்டு. இதே கருத்துள்ள பாட்டு வேறோர் இடத்திலும் வருகிறது. அப்பொழுது அதைக் காணலாம்.

*மனையாளும் மக்களும் வாழ்வும் தனமும்தன் வாயில்மட்டே*
*இனமான சுற்றமும்ம யானம்மட் டேவழிக் கேதுதுணை?*
*தினையாம் அள(வு)எவ் அளவு ஆகினும் முன்பு செய்த தவம்*
*தனைஆள என்றும் பரலோகம் சித்திக்கும் சத்தியமே.*

என்பதே அந்தப் பாடல். இதே கருத்துள்ள பாடல் மேலே சொன்னபடி அடுத்துத் தொடர்ந்து வருகின்றது. சுற்றமும் வாழ்வும் வீடுவரை வரும். கண்ணிலே நீர் வடிய அழுகின்ற மகளிரும் வீதிவரை வருவர். விம்மி இருகைகளையும் மேலே வைத்து அழுகின்ற புதல்வரும் சுடுகாடு வரைதான் வருவர். ஆனால் நம்மைப் பின்பற்றித் தொடர்ந்து வருவன அவரவர் செய்த பாவபுண்ணியங்களே. அது பற்றிய பாடல் இதோ.

***அத்தமும் வாழ்வும் அகத்துமட் டே? விழி அம்(பு) ஒழுக***
***மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மிஇரு***
***கைத்தலம் மேல்வைத்(து) அழும்மைந் தரும்சுடு காடுமட்டே***
***பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே.***

இதனையே கவியரசர் கண்ணதாசன் உள்வாங்கி

வீடுவரை உறவு வீதிவரை மனைவி
காடுவரை பிள்ளை கடைசிவரை யாரோ?

என்று திரைப்படப் பாடலில் எழுதிக் காட்டுவார்.

செய்யும் வழிபாட்டைச் சித்த சுத்தியோடு செய்ய வேண்டும். அப்படி இல்லாமல் புண்ணியப் புனலாடி என்ன பயன்? வெண்ணீறு பூசுவதால் விளையும் பயன் யாது? மனமே! நீ மண்மேல் மாற்றிப் பிறக்கும் வகையறிந்தாய் இல்லை. பெரிய வேதங்களில் சொல்லப் பெறுகின்ற எழுகோடி மந்திரங்ளை இயம்பி என்ன பயன்? ஆற்றிலே கிடந்தும் கரை ஏற வழியின்றி அலைகின்றாயே.

***நீற்றைப் புனைந்(து) என்ன? நீராடப் போய் என்ன? நீமனனே!***
***மாற்றிப் பிறக்க வகையறிந் தாய்இல்லை மாமறைநூல்***
***ஏற்றிக் கிடக்கும் எழுகோடி மந்திரம் என்ன கண்டாய்?***
***ஆற்றில் கிடந்தும் துறைஅறியாமல் அலைகின்றையே.***

இறைவனை நம்புவதால் என்ன வரும்? விதிக்கடவுள் ஆகிய நான்முகன் படைப்பு திருமாலின் காக்கும் தன்மையும் சிறந்த கயிலைப் பதியான சிவபெருமானின் அழிப்பும் நம்மை எதுவும் செய்யாது. பேரின்பமே கதி எனக்கொண்டு மற்றவற்றை எல்லாம் தூக்கத்தில் வந்த கனவெனக் கருதிமனமே! அவற்றை மதியாது இரு. இதுவே உனக்கேற்ற நல்ல கருத்தாகும்.

*விதியார் படைப்பும் அரியார் அளிப்பும் வியன்கயிலைப்
பதியார் துடைப்பும் நம்பால் அணுகாது பரமானந்தமே
கதியாகக் கொண்டு மற்றதெல்லாம் துயிலில் கனவெனநீ
மதியா திருமன மே! இது காண்நன் மருந்துனக்கே!*

ஆண்டவன் ஒவ்வோர் உயிருக்கும் ஒவ்வொரு பணியிட்டு இருக்கின்றான். அவற்றைப் பற்றிக் குறிப்பாகவே சொன்னாலும் விரிவாகவே பேசுகின்றார் பட்டினத்தார். அடியனாகிய நாயேனுக்கு உள்ளது சிவத் தொண்டு; அத்துடன் பிச்சை வாங்கி உண்ணுதலையும் செய்ய வேண்டும். பழங்காலத்தில் ஞானியர் பசித்த பொழுது வீடுதோறும் கையேந்துவர். கிடைத்ததை உண்பர். இதனைக் கரபாத்திர பிச்சை என்றுரைப்பார். ஓம் நமசிவாய என்னும் ஐந்தெழுத்து மந்திரமாகிய பஞ்சாட்சரத்தை இடைவிடாது ஓதுவதற்கே வாய் இருக்கின்றது. அஞ்சவரும் பேய்களை அப்புறம் போக்கத் திருநீறு உண்டு. நம்மைத் திகைக்க வைக்கின்ற பிறவிப் பிணிக்கு மருந்தாய் இருப்பது ஈசனின் அருள். கண்கள் அவனைக் காண்பதற்கே என்ற கருத்துப் புலப்படுமாறு பாடலை அமைத்துள்ளார்.

*நாய்க்(கு) உண்டு தொண்டு நமக்(கு) உண்டு பிச்சை
நமனைவெல்ல
வாய்க்(கு) உண்டு மந்திர பஞ்சாட் சரம்மதி யாமல்வரும்
பேய்க்(கு) உண்டு நீறு திகைப்(பு) உண்டு நின்ற
பிறவிப்பிணி
நோய்க்(கு) உண்டு தேசிகன் தன்அருள் நோக்கங்கள்
நோக்குதற்கே*

அடுத்ததாக அவர் பாவனையாகப் பூசை செய்பவர்களைச் சாடுகிறார். பிறர்காண ஆடம்பரமாக ஆரவாரமாகப் பூசை செய்வோர் ஏராளம். அகவழிபாடு சிறந்தது என்பது ஆன்றோர் கருத்து. நியம நிட்டைகள் வேதங்களைப் பொருள் உணராமல் ஓதுதல் வேள்விகள் நடத்தல் தர்ப்பணம் சந்தி செபமந்திரங்கள் ஓதல் யோகநிலை சந்தனம் வெண்ணீறு பூசி ஒவ்வொரு சாமங்களிலும் இவர்கள் செய்கின்ற வழிபாடுகள் அனைத்தும் பாவனை வழிபாடே.

*நேமங்கள் நிட்டைகள் வேதங்கள் ஆகாத நீதிநெறி*
*ஓமங்கள் தர்ப்பணம் சந்தி செபமந்த்ர யோகநிலை*
*நாமங்கள் சந்தனம் வெண்ணீறு பூசி நலமுடனே*
*சாமங்கள் தோறும் இவர்செய் பூசனைகள் சர்ப்பனையே*

அடுத்தாகத்தம் நெஞ்சத்திற்கு அவர் ஓர் அறிவுரை கூறுகிறார். நெஞ்சமே! நான் எத்தனை முறை உனக்குப் புத்திபல சொன்னாலும் நீ கேட்கவில்லை. எதற்காக இவ்வாறு கேட்காமல் கெட்டழிந்து துன்பத்தில் கிடந்து உழல்கின்றாய்? பாழ்வெளியாகத் தோன்றுகின்ற வானத்து மீனுக்கு வலிய தூண்டிலை வீசிப் பிடிக்கும் வகை போலப் போனதை மறுபடி நினைக்கின்றாயே இது என்ன புத்தி?

*நான்எத் தனைபுத்தி சொன்னாலும் கேட்கிலை நன்னெஞ்சமே*
*ஏன்இப் படிக்கெட்(டு) உழலுகின் றாய்? இனி ஏதுமில்லை*
*வானத்தின் மீனுக்கு வன்தூண்டில் இட்ட வகையதுபோல்*
*போனத்தை மீள நினைக்கின் றனைஎன்ன புத்தியிதே?*

சிவபோகமான பயிரை வளர்ப்பது எப்படி? என்பதற்கு வழி சொல்லுமுகத்தான் செய்யும் சிவயோகப் பயிற்சியையே சான்றாகக் காட்டுகின்றார். பஞ்சாக்கரமாகிய அஞ்செழுத்து என்னும் கோடரி கொண்டு இந்த ஐம்புலன்களாகிய வஞ்சகமான புலக்கட்டை வேரற வெட்டி வளமாக்கி நன்கு திருத்திச் சதாசிவம் என்கிற விதையை ஊன்றி இடையே தோன்றுகின்ற அற்ப எண்ணங்களான களைகளைப் பறித்து நான் சிவபோகத்தை வளர்த்தேன் என்று கூறுகிறார். பாடலைப் பார்ப்போம்.

*அஞ்சக் கரமெனும் கோடலி கொண்டிந்த ஐம்புலனாம்*
*வஞ்சப் புலக்கட்டை வேர்அற வெட்டி வளங்கள்செய்து*
*விஞ்சத் திருத்திச் சதாசிவம் என்கின்ற வித்தையிட்டுப்*
*புஞ்சக் களைபறித்தேன் வளர்த்தேன் சிவபோக சாரத்தையே*

*(தொடரும்....)*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## அன்னக்குழியும் வையையும் அழைத்தது

வேதநாயகனான சோமசுந்தரப் பெருமான் பின்னர் தடாகைப் பிராட்டியாரை நோக்கி உள்ளே நகைத்துக் கொண்டே பசிப்பிணியால் அல்லல்படுகின்ற குண்டோதரனுக்காகத் தனது சக்தியாகிய அன்னபூரணியை நினைந்தருளினார். உடனே நான்கு திசைகளிலும் இருந்த தயிர்க்கடலானது நிலத்தின் இடையே கிழித்துக்கொண்டு ஊற்றெடுத்துப் பொங்கி எழுந்ததுபோல நான்கு பெருங்குழிகள் தம்மிலிருந்து சுவை மிகுந்த தயிர் கலந்த அன்னம் பொங்கி எழுந்தது. அப்போது சுந்தரபாண்டியர் தமது குடையாள் குண்டோதரனைப் பார்த்து, உனது பெரும் பசி நீங்கும் வண்ணம் உண்பாய் என்று கட்டளையிட்டருளினார். நான்கு சோற்றுக்குழிகளிலிருந்தும் தயிர் சோற்றை வாரி வாரி உண்டான். இறைவன் திருவருளால் குண்டோதரன் தன் பெரும்பசி தீர்ந்தான். உடல் எல்லாம் வயிறாகப்பருத்த குண்டன் தரையிலே விழுந்து மூச்சுவிட முடியாமல் புரண்டான். அடுத்துக் குண்டோதரனுக்குத் தாகம் மேலிட்டது. நீர் நிலைகளைத் தேடிச்சென்றான். கிணறு, ஓடைகள், குளங்களிலே வாய்வைத்து உறிஞ்சிக் குடித்தான், அவை வறண்டு போகுமாறு. அப்போதும் அவனது பெருந்தாகம் தணியவில்லை. சுந்தரப் பெருமானின் திருவடிகளில் விழுந்து முறை செய்தான். உடனே சிவபெருமான் தனது திருமுடியில் துலங்கிய கங்காதேவியை நோக்கி, மாதே ! மதுரையம்பதியின் புறத்தே ஒரு நதியாக விரைவில் வருவாயாக என்று ஆணையிட்டார்.

சிவபெருமானது திருச்சடையை விட்டு நீங்கிக் கொண்டிருந்த கங்காதேவியானவள், முன்பு ஒருக்கால் பகீரதனுக்காக என்னைத் தீர்த்தமாகத் தேவரீர் விடுவித்தபோது என்னில் மூழ்குகின்றவர்களின் பாவத்தையும் குற்றங்களையும் களைந்து செல்லுமாறு பணித்தீர்கள். இன்னும் நான் ஒரு ஆறாகிப் பாய்ந்தால் என்னைக் காண்பவரோ, தொட்டவர்களோ, என்னில் மூழ்கியவர்களோ, தேவரீரிடம் பக்தியும், கல்வியும், ஞானமும், வீடும் பெறும்படி அருளவேண்டும் என்று வேண்டிக்கொண்டு விடைபெற்றாள். பின்பு மிகுந்த வேகத்தோடு எழுந்து நல்லாறாக வானத்திலிருந்து இறங்குவதற்குச் சென்றாள்.

நதி உருவங்கொண்ட கங்கைக்கு அலைகள் கைவளையல்களாக அமைந்தன. முத்துக்கள் பற்களாக விளங்கின. நுரையே ஆடையாகியது. பூங்கொடிகளே இடை; கருமணல் மணங்கமழ் கூந்தல். இவ்வாறாகத் தானே பலகைப் பாங்கு காட்டிப் பேரிரைச்சல் செய்து வருகின்ற ஆறு கதியிலே யானைபோலக் கம்பீரமாகவும், வளைந்து நெளிந்து வருவதிலே பாம்பினைப் போன்றும், நிலத்தைத் தோண்டி வருவதிலே வராக மூர்த்தியைப் போலவும், வாமனனைப் போலவும், கண்ணனைப் போலவும் வந்து கொண்டிருந்தது.

ஓடிவந்த பெருவெள்ளத்தைக் கண்ட சிவபெருமான் தாகத்தால் துடித்துக் கொண்டிருந்த குண்டோதரனைக் கண்டார். அந்தோ எனது நீர் வேட்கை தணியவில்லையே என்று வெதும்பிய குண்டோதரனை அந்த ஆற்றின் அருகே விடுத்தார். குண்டோதரன் பொங்கிப் பெருகி வரும் அந்த நதியின் நடுவே சென்றான். தனது இரண்டு கைகளையும் கரைகளோடு சேர்த்து நீட்டிக் கொண்டான். தடைபெற்ற ஆற்று நீர் பெரிய மடுவைப்போல் தேங்கியது. தங்கிய தண்ணீரை தன் பெருவாய் திறந்து பருகினான் குண்டோதரன். தணியாத தாகம் ஒருவாறாகத் தணிந்தது. பின்னர் அவன் களிகொண்டு சிவபெருமான் சன்னதி சேர்ந்து திருவடிகளில் விழுந்து வணங்கினான். அன்பு ததும்பும் நற்கீதமும் படித்தான். சொல்லுக்குப் பொருளாக விளங்கும் சுந்தரேசர் தனது குடை பிடிக்கணம் பாடும் பாட்டினைத் திருச்செவி மடுத்து மகிழ்ந்தார். பூதகணங்களுக்குத் தலைமை வகிக்கும் பதவியையும் குண்டோதரனுக்கு அருளினார். பின்னர் தடாதகை தேவியாரோடு செங்கோல் செலுத்தி அருளினார்.

குண்டோதரனின் தாகம் தீர்க்க வந்த புனித ஆறு வையை என வழங்கப்படுவதாயிற்று. சிவபெருமானது செஞ்சடையில் இருந்து வந்ததால் சிவகங்கை எனப்பட்டது. சிவஞான தீர்த்தம் என்றும் போற்றப்பெறும், மிகவும் வேகமாக வந்ததால் வையையாறு வேகவதி எனவும் மதுரைப் பதியை மாலைபோலச் சூழ்ந்து வந்ததால் கிருதமாலை எனவும் திருப்பெயர் பெற்றது.

*(தொடரும்....)*

# பட்டினத்தார் பைந்தமிழ் - 4

தமிழாகரர் தெ. முருகசாமி

(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

பட்டினத்துப் பிள்ளையார் அருளிச் செய்த கோயில் நான்மணி மாலை என்ற நூலின் தலைப்பிற்கேற்ப வெண்பா கட்டளைக் கலித்துறை ஆசிரிய விருத்தம் என்ற மூன்று பாக்களோடு நேரிசை ஆசிரியப் பாவால் பாடும் துறையில் நாலாவது பாடலாக அமைந்தது சிவன் - பார்வதி திருமணப் பாட்டாகும்.

கடவுளுக்குத் திருமணம் வேண்டுமா? என்பர் சிலர். முன் இருந்த தனை இருந்தபடி இருந்து காட்டி என்றபடி நித்தமும் உலக இயக்கம் ஆண் பெண் உறவால் நடப்பது என்ற உண்மையை நாளும் உணரச் செய்யும் விதமாகவே கடவுளுக்கான கலியாண வைபவம் அனுமானமாக உணர்த்திக் காட்டுவதாகும். இந்த அடிப்படையில் தான் சிவன் நித்தம் மணாளராகவும் உமா தேவி நித்திய கலியாணியாகவும் அழைக்கப் பெறுகின்றனர்.

இந்த வகையில் திருமாலின் தங்கையும் மலையரசன் மகளுமான உமா தேவியைச் சிவன் திருமணம் செய்து கொள்வதாகப் பட்டினத்தார் நூலின் 4ஆம் பாடலை அமைக்கின்றார். திருமணத்திற்கு வருகை புரிந்தோர் பலர். மணச்சடங்கின் முதல் நிகழ்வாக அறுகம் புல்லால் எண்ணெய்யினைத் தொட்டுத் தலையில் வைத்துப் பின்னர் சுண்ணம் பூசி நீராட்டுவர். அவ்வாறே இத்தைலச் சீராட்டை அமரர்கள் செய்தனர் என்கிறார் பட்டினத்தார். திருமணப் பந்தருள் அமரர் முன்புகுந்து அறுகு சாத்தினார்களாம். இக் குறிப்பு மாணிக்கவாசகரின் திருப்பொற் சுண்ணப் பதிகத்தில் அறுகெடுப்பார் அயனும் அரியும் அன்றி - மற்றிந்திரனோடு அமரர் என்பதால் அறியப்படுகிறது. (அறுகு - எடுப்பார் = அறுகெடுப்பார்)

இங்ஙனம் மங்கல நீராட்டு முடிந்து திருப்பூட்டுதலாம் மங்கல அணி அணிவித்தலாகிய திருமண வைபவம் முடிந்ததும் கூடி மண மக்களை

வாழ்த்தியதோடு பரிசளிப்பான வரிசை வழங்குவார்கள். தாம் வந்ததற்கான பதிவைச் செய்வார்கள். அவற்றிற்கான புத்தகம் (பேரேடு) ஒன்றிலும் குறிப்பர்.

இக்குறிப்பேடு சிவன் - பார்வதி திருமணத்தில் இருந்திருக்கும்; அப்போது பிறக்காத பட்டினத்தார் அதற்காக வருந்தினாலும் நித்தம் மணாளராகவே சிவன் உள்ளமையால் நாளும் சிவனது திருமணம் நடக்கும் அனுமானத்தால் தன்னையும் திருமணத்தில் கலந்து கொண்டதாக எழுதிக் கொள்ள இறைவனிடம் வேண்டுகிறார்.

இது அடியார் திருக்கூட்டத்தில் தன்னை இருக்கச் செய்யுமாறு பட்டினத்தார் வேண்டிக் கொண்ட வேண்டுதலாகும். மாணிக்கவாசகர் தில்லையில் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரிவாய் என வேண்டிக் கொண்டார். அது போலப் பட்டினத்தாரும் தில்லையில் வேண்டிக் கொண்டார் என்று எண்ணலாம்.

மேற்படியாக வரிநெடும் புத்தகத்தில் வருகையை எழுதிக் கொள்வது என்பது பொதுவாகத் தமிழ்நாட்டினரின் வழக்கமாயினும் சிறப்பாக, குறிப்பாகத் தனவணிகர்களான நகரத்தார் மரபில் கட்டாயமாகப் பின்பற்றப் படுவதொரு முறையாகும். இக்குறிப்பைச் சுட்டுவதன் மூலம் பட்டினத்தார் நகரத்தார் மரபினர் எனத் தெளிவாகத் தெரிகிறது.

இக்குறிப்பில் நின்தம் பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்து என்னையும் எழுத வேண்டுவன் என்றது நகரத்தார் முறையையே பெரிதும் சுட்டும் அகச்சான்றாக உள்ளது எனலாம்.

அதாவது பொதுவாகத் திருமணத்தில் வரிசைப் பொருளாக மொய்ப்பணம் வைத்தோரைக் குறிக்கும் பேரேட்டிற்குப் பட்டினத்தார் கூறும் வரிநெடும் புத்தகம் மாறானது எனத் தெரிகிறது. நின்தமர் பெயர் மட்டும் எழுதியது எனப் பட்டினத்தார் கூறுவதால் சுற்றத்தாராகிய புள்ளிகளை மட்டுமே குறிப்பதாகும். இதனால் அவர் நகரத்தார் என்பது உறுதியாகிறது.

மேலும் நகரத்தாரை மன்னருக்கு இணையாகக் கூறுவது தொன்று தொட்டு வரும் வழக்கமாகும். மன்னர் பின்னோர் என்று இளங்கோவடிகள் இதனைக் குறிக்கின்றார். இதனால் அரசமரபிற்கேற்ற நடைமுறைகள் நகரத்தார்க்கும் உண்டு என்பதால் இப்பாடலில் சிவனுக்கு உரிய தசாங்கம் பாடப் பெற்றுள்ளது சிந்தனைக்கு உரியது.

பாடல் தில்லை நடராசரைப் பற்றியது. அத்தில்லை ஈசன் பட்டினத்தார்தம் பாடல் திறமையால் நகரத்தாராகவே ஆக்கப்பட்டு விட்டதால் அதாவது நின்தமர் பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்தில் தன் பெயரை எழுதும் படி வேண்டியதால் நடராசர் நகரத்தார் ஆகி விடுகிறார். எனவே உலகை ஆளும் மன்னர்க்குரிய தசாங்கச் சிறப்பு நடராசர்க்கும் உரிமை உடையதாய்ப் பட்டினத்தாரால் பாடப் பெற்றது என்க.

அரசரின் பத்து வகையான சிறப்பே தசாங்கம். அதன்படி சிவனுக்கு 1. மாலை - கொன்றை, 2. கொடி - இடபம், 3. பறை - கையிலுள்ள உடுக்கை, 4. ஆறு - தலையில் உள்ள கங்கை, 5. ஆணை - ஆட்சிச் சக்கரம், 6. யானை - அயிராவணம், 7. குதிரை - நான்மறை, 8. நாடு - விண்ணாடு, 9. மலை - மேரு, 10. ஊர் - பூலோகத் தில்லை.

இத்தசாங்கச் சிறப்பை எல்லாம் நாவாரப் புகழ்ந்து கொண்டும் சிவனின் திருநாமங்களை உச்சரித்துக் கொண்டும் அமரர்கள் திருமணத்திற்கு வந்தார்கள் என்கிறார் பட்டினத்தார்.

திருமணத் தம்பதியர் பற்றிய குறிப்பை முதலில் தரும் பட்டினத்தார் மணமகனாகிய சிவபெருமான் பற்றிக் கூறும்போது "உரையின் வரையும் பொருளின் அளவும் இருவகைப் பட்ட எல்லை கடந்து" நிற்பார் என்று கூறுகிறார். சொல்லுக்கும் சொற்பொருளுக்கும் அப்பாற்பட்டவர் சிவன் என்ற இந்தக் குறிப்பு தத்துவார்த்தமானது.

அடுத்து மணமகள் அறிமுகத்தைத் திருமால் தங்கை என்றும் மலையரசன் மகள் என்றும் கூறும்போது திருத்தங்கை திருப்பாவை

என்ற சொற்களைக் குறித்தார். இப்படி அருவ நிலையில் சிவனையும் உருவ நிலையில் உமாதேவியையும் குறித்ததில் ஓர் நுட்பம் உள்ளது.

சிவனுக்குத் திருவைப் புணர்ப்பவள் சக்தியே என்பதால் தான் சிவனுக்கான எந்தப் புகழ்ச் சொல்லையும் சேர்த்துக் கூறாத பட்டினத்தார் தங்கை பாவை என வருகின்ற இரண்டிலும் திரு என்று அடைமொழி சேர்த்துக் கூறினார்.

இத் திரு என்ற சொல் தொல்காப்பியத்தில் தலைவன் தலைவிக்கான பத்துப் பொருத்தத்தில் ஒன்றாயினும் அச்சொல் ஆணுடன் பெண் சேருகின்ற போதுதான் எல்லாம் கைகூடும் என்ற பொருளில் செட்டி நாட்டில் மங்கல அணி அணிவிப்பதை மற்ற இடங்களில் தாலிகட்டியாயிற்றா அல்லது மாங்கல்ய தாரணம் ஆயிற்றா என்பதாகக் கூறும் வழக்கின்றித் திருப்பூட்டி ஆயிற்றா? என்னும் மங்கல வழக்கு உள்ளதை இன்றும் காணலாம். இந்த நுட்பமான அடைமொழிச் சொல்லான திருவை உமாதேவியொடு பொருத்திக் கூறியதாலும் பட்டினத்தாரை நகரத்தார் மரபினர் எனச் சொல்லா மற் சொல்கிறது இப்பாடல்.

கரிமா என்பது சூக்குமமான நுண்மை; தூலமாகக் கண்ணுக்குத் தெரிவதாகும். இதனை ஒரு எடுத்துக் காட்டால் விளக்க கானில்வாய் நுளம்பும் கருடன் ஆதலின் என்றார். காட்டில் திரியும் நுளம்பு (கொசு) சிறிதாயினும் அதுவே பெரிதான உருவில் கருடனாகமாறி விடுதல் போல அணு அணுத்திரளாகி விடுவது இறையின் ஆற்றலால் என்பது கருத்து.

இப்படி நுளம்பு - கருடன் என்ற உவமையின்வழி சித்தியாம் கரிமாவால் அணு - அணுத்திரள் மாலையாவதைப் பட்டினத்தார் கூறுவது - ஆண்டவனின் செயற்கருஞ் செயலைச் சுட்டுவதன் மூலம் ஆன்மாவை உயர்த்தும் சித்தாந்தக் கருத்தை வெளிப்படுத்தவே என்பது இப்பாடலின் கருத்துப் பிழிவாகும் எனலாம்.

பாடலின் தொடக்கத்தில் யான் எனது என்னும் இருபற்றை நீக்கிக்

கொள்வதை ஆன்மாவின் இலக்கணமாகச் சுட்டிய பட்டினத்தார் அத்தகு ஆன்மாவைச் சிவன் ஈடேற்றி உயர்த்துவார் என்ற உறுதிப்பாட்டை இறுதியில் பாடலின் சாரமாகக் கூறினார் என்பது ஆண்டவனாம் அம்பலவாணனின் பெருங்கருணையைப் பிரகடனப்படுத்திய உத்தி எனலாம். என்னே! பட்டினத்தார் பைந்தமிழ்!

*(தொடரும்....)*

# மடாலய நிகழ்வுகள்

## கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளியில் கலை அறிவியல் கண்காட்சி

கோவிலூரில் உள்ள கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளியில் கலை அறிவியல் கண்காட்சி 26.11.2016 அன்று நடைபெற்றது. இப்பள்ளியில் மழலையர் முதலாம் வகுப்பு முதல் 12ஆம் வகுப்பு வரை உள்ள நூற்றுக்கணக்கான மாணவ மாணவியர் பல்வேறு கண்காட்சிகள் சோதனைகள்,நினைவுச் சின்னங்கள் செய்து கண்காட்சியில் பங்கேற்றனர். இக்கண்காட்சியைக் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள், மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன், பேரா. பாலச்சந்திரன், பள்ளி முதல்வர் திருமதி மணிமொழிமோகன் ஆகியோர் குத்துவிளக்கேற்றித் தொடங்கி வைத்தனர். மழலையர் வகுப்பு மாணவர்கள் சோப்புப் போட்டுக்கைகழுவுதல், கற்பிக்கும் சாதனங்களைக் கொண்டு எண்கள், வடிவங்கள், நிறங்கள் ஆகியவற்றைச் சிறப்பாகச் செய்து காண்பித்து விளக்கிக் கூறினர். உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் குதுப்மினார், பாலங்கள், அணைகள், பாரம்பரியச் சின்னங்களின் மாதிரிகளைச் செய்திருந்தனர். முருகனின் அறுபடை வீடுகளின் தோற்றம், இயற்கை வேளாண்மை, எரிமலை, மழைநீர் சேகரிப்பு, நீர்ச்சிக்கனப் பயன்பாடு, நீரேற்றி, லிப்ட், வேலை செய்யும் முறைகள், சத்துணவு தானியங்கள், பழங்கள், காய்கறிகளில் காணப்படும் சத்து, வைட்டமின், தாதுப்பொருட்கள், பல்வேறு நாணயங்கள், எலக்ட்ரானிக், வேதியியல், உயிரியல் சோதனைகள்,

இந்திய ரூபாய் நோட்டுக்களில் காணப்படும் பல்வேறு உருவங்கள், கணினியின் பல்வேறு பொருட்கள் குறித்துச் செய்து காண்பித்தும், மாதிரிகளின் மூலமும், காணொளிக் காட்சி, நழுவுபடக் காட்சிகளின் மூலமும் சிறப்பாக விளக்கிக் காண்பித்தனர்.

கோவிலூர்க் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் டாக்டர் செல்லப்பா, டாக்டர் ரவீந்திரன், மாயாண்டி, மணிமொழிமோகன், மணிமொழிமுருகன், பள்ளியின் துணைமுதல்வர் வள்ளியம்மை, பெற்றோர்கள், பொதுமக்கள், மாணவ மாணவியர், ஆசிரியர்கள் என ஆயிரத்துக்கும் மேற்பட்டோர் கண்காட்சியைப் பார்வையிட்டனர். எஸ்.எம்.எஸ். ஆண்கள் மேல்நிலைப்பள்ளி ஆசிரியர் சுந்தரராமன், எஸ்.எம்.எஸ். பெண்கள் மேல்நிலைப்பள்ளி ஆசிரியை திருமதி பரிபூரணம் ஆகியோர் நடுவர்களாக இருந்து கண்காட்சியில் சிறப்பாகப் பங்குபெற்ற பரிசுக்குரிய மாணவர்களைத் தேர்வு செய்தனர். மாணவர்களின் அறிவியல் மற்றும் கலை ஆர்வம், படைப்புத்திறன், விளக்கும் திறன், சொல்லாற்றலை, வளர்க்க இக்கண்காட்சி உதவுகிறது என மாணவர்கள் கூறினர். கண்காட்சி சிறப்பாக இருந்ததாகவும் மாணவர்கள் நன்கு விளக்கிக் கூறியதாகவும் பல்வேறு தகவல்களை அறியவும் பொது அறிவை மேம்படுத்தவும் பெரியவர்களுக்குப் பயன்பட்டதாகப் பொதுமக்களும் பெற்றோரும் தெரிவித்தனர்.

### ஈசான்ய ஞான தேசிகர் சமாதிக்கோவில் மகா கும்பாபிஷேகம்

கோவிலூர் மடாலயத்தின் கிளை மடமான ஈசான்ய மடம் திருவண்ணாமலையில் உள்ளது. இம்மடத்தில் ஈசான்ய ஞான தேசிகரின் ஜீவசமாதி உள்ளது. இச்சமாதி புதுப்பிக்கப்பெற்றுப் புதிதாகக் கோவில் எழுப்பப்பெற்று மகா கும்பாபிஷேம் நடைபெற்றது. கார்த்திகை மாதம் 20ஆம் தேதி 05.12.2016 திங்கட்கிழமையன்று யாகசாலை பூஜைகள் துவங்கின. 09.12.2016 வெள்ளிக்கிழமை காலை 8.30 மணிக்கு, கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப ஸ்வாமிகள் தலைமையில் மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. நகரத்தார்களும் பொதுமக்களும் பெருமளவில் பங்கு பெற்றனர்.

04.12.2016 அன்று காரைக்குடி திருநாவுக்கரசு சுவாமிகள் குருபூசையும் 15.12.2016 அன்று இராயவரம் வள்ளியப்ப ஐயா குருபூசையும் 19.12.2016 அன்று காரைக்குடி ஸ்ரீமத் ராமசாமி ஞான தேசிகர் 4ஆவது பட்டம். குருபூசையும் சிறப்பாக நடைபெற்றன.

26.11.2016 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் புலவர் அரு.சுந்தரம், ஏயர்கோன் கலிக்காம நாயனார் என்னும் தலைப்பில் சொற்பொழிவாற்றினார்.

## அதிமதுரக் கவிகள்

### காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர் நா. மீனவன்

**சரியாசனம்**

அதிமதுரப் புலவரின் சூழ்ச்சி வலையில் அரசனும் சிக்கித் தம்மை மதியாத நிலைகண்டு நகைத்த காளமேகம் தம்மை ஆட்கொண்ட அகிலாண்ட வல்லி அம்மை இருந்த திசை நோக்கித் தொழுதவராய்த் தமக் கேற்பட்ட அவமதிப்பை அழித்துத் தன்னை அவர்கள் மதிக்கும்படியான நிலையைத் தந்தருளுமாறு வேண்டிப் பாடினார். அந்தப் பாடல் இதோ

வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள் - வெள்ளை
அரியா சனத்தில் அரசரோ(டு) என்னைச்
சரியா சனம்வைத்த தாய்.

(பொருள் - வெண்ணிறமான ஆடைகளும் வெண்ணிறமான அணிகலன்களும் பூண்டு வெண்மையான தாமரைப் பூவிலே வீற்றிருப்பவளான கலைமகளே! தூய வெண்மையான அரியாசனத்தில் அரசருக்குச் சமமாக எனக்கும் சரியாசனம் தந்தாள் என்தாய்) அரசனின் அரியணை, பக்கத்தில் வளர்ந்து இடம் கொடுத்தது. அப்படியிருந்தும் அரசனும் அதிமதுர கவியும் அவருடைய அவைப்புலவர்களும் காளமேகப் புலவரை மதியாதிருந்தனர்.

**காட்டுச் சரக்கும் கூட்டுச் சரக்கும்**

(இனி வரும் செய்திகள் திருமலைராயன் அவையில் நடந்தவை) அதிமதுரகவி முதலாகத் தொடங்கி அவரும் புலவர்கள் பலரும் கேட்ட கேள்விகளுக் கிணங்கக் காளமேகம் பாடித் தண்டிகைப் புலவர்களை வென்ற செய்தி பேசப்படுகின்றது.

அதிமதுர கவியை நோக்கி உன்னை அதிமதுரம் என்று கூறுவ தேன்? அதற்குத் தனித்தன்மை கிடையாது. அது ஒரு காட்டுச் சரக்கு; காரம் இல்லாத சரக்கு பிறசரக்குகளோடு கூட்டினால்தான் அது பயன்படும் என்று நகையாடி ஒரு வெண்பாவைப் பாடுகிறார் காளமேகப் புலவர். தனித் தகுதி அவருக்கில்லை பிறரோடு சேர்ந்ததால் வந்த பெருமையே அன்றி வேறு பெருமையில்லை என்ற கருத்துடன் பாடத் தொடங்கிப் பாடிய வெண்பா இது

அதிமதுரம் என்றே அகிலம் அறியத்
துதிமதுரமாய் எடுத்துச் சொல்லும் - புதுமையென்ன
காட்டுச் சரக்(கு) உலகில் காரம் இல்லாச்சரக்கு
கூட்டுச் சரக்கதனைக் கூறு.

அதிமதுரம் என்பது காட்டில் கிடைக்கக் கூடிய வேர். அது இருமல் மருந்தாகப் பயன்படும் சரக்கு என்பது மருந்தைக் குறிக்கும் சொல். அதிமதுரத்தைப் பிறமருந்துகளோடு சேர்த்துக் கொடுத்தால்தான் அதற்குப் பெருமையுண்டு. மேலும் அந்த அதிமதுரம் இனிப்புச் சுவையினை உடையது. காரம் இல்லாத சரக்கு. தனித்துவம் இல்லாத சரக்கு என்று ஏளனம் செய்து பாடினார் காளமேகம்.

**நானே காளமேகம்**

உடனே அங்கிருந்த அதிமதுரகவி முதலான தண்டிகைப் புலவர்கள் அனைவரும் சினமுற்று ஆத்திரத்துடன் நீவிர் யார்? என்று வினவினர். இது கேட்ட காளமேகம் தன்னுடைய ஆற்றலைப் புலப்படுத்த எண்ணியவராய்க் கீழ்க்காணும் கவியைப் பாடினார்.

தூ(து)ஐந்து நாழிகையில் ஆறுநா ழிகைதனில்
சொற்சந்த மாலை சொல்லத்
துகள்இலா அந்தாதி எழுநா ழிகைதனில்
தொகைபட விரித்(து)உ ரைக்கப்
பாதம்செய் மடல்கோவை பத்துநா ழிகைதனில்
பரணிஒரு நாள்முழு வதும்
பாரகா வியம்எலாம் ஓர்இரு தினத்திலே
பாரக்கொ டிகட்டி னேன்
சீதம்செயும் திங்கள் மரபினான் நீடுபுகழ்
செய்யதிரு மலைரா யன்முன்
சீறுமா(று) என்றுமிகு தாறுமா றுகள்செய்
திருட்டுக் கவிப்புல வரைக்
கா(து) அங்(கு) அறுத்துச் சவுக்கிட்(டு) அடித்துக்
கதுப்பில் புடைத்த வெற்றிக்
கல்லணையி னொடுகொடிய கடிவாளம் இட்(டு)ஏறு
கவிகாள மேகம் நானே.

தூது பாட ஐந்து நாழிகை; சொற்சந்த மாலை பாட ஆறு நாழிகை; தூது என்னும் சிற்றிலக்கியம் ஐந்து நாழிகைக்குள். குற்றமின்றி அந்தாதி வகைகளைப் பாட ஏழு நாழிகை. மடல் கோவை முதலியன பாடப் பத்துநாழிகை. பரணி இலக்கியம் பாட ஒரு நாள். பெரிய காவியங்கள் பாட ஒன்று அல்லது இரண்டு நாள்கள். இவ்வாறு குறிப்பிட்டபடி பாடுவேன் நான் என்று வெற்றிக்கொடி நாட்டி வந்துள்ளேன்.

குளிர்ச்சி தருகின்ற சந்திரன் மரபைச் சார்ந்தவன் நெடிய புகழுடையவனும் ஆகிய செங்கோல் தவறாத மன்னன் திருமலைராயன் முன் சீற்றமும் மாற்றமும் மிகுதியாகத் தாறுமாறான செயல்களைச் செய்து கொண்டிருக்கிற திருட்டுக் கவிராயர்களை (அதிமதுரகவி முதலான தண்டிகைப் புலவர்களைக் குறித்த தொடர்) அவர்களின் காதை அறுத்துச் சவக்காலே அடித்துப் புடைக்க வைத்து வெற்றிக்கடிவாளம் இட்டு அதன் மேல் ஏறிப் பாய்ந்து செல்லும் கவி காளமேகம் என்னும் புலவன் நானே. இவ்வாறு தன்பெருமை தோன்றவும் தண்டிகைப் புலவர்களின் செருக்கை அடக்கவும் பாடினார்.

### காளமேகம் புறப்பட்டது

மேலும் தன் பெருமையை நிலைநாட்டக் கீழ்க்கண்ட பாடலைப் பாடுகிறார் காளமேகம்; எவ்வாறு புறப்பட்டது என்பதை விளக்குகிறார்.

கழிஉந் தியகடல் உப்(பு) என்று நன்னூல் கடலில்மொண்டு
வழியும் பொதிய வரையினில் கால்வைத்து வன்கவிதை
மொழியும் புலவர் மனத்தே இடித்து முழங்கிமின்னிப்
பொழியும் படிக்குக் கவிகாள மேகம் புறப்பட்டதே.

அதாவது கடல் கழியிடத்தே கொண்டு தள்ளிய உப்பு என்பதைப் போல் நல்ல நூற்கடல்களிலே முகந்து கொண்ட அருவிகள் வழியும் பொதிய மலையில் கால்வாங்கிப் பெய்து வலியதான போலிக் கவிதைகளைச் சொல்லித் திரியும் புலவர் உள்ளத்திலே இடியை உண்டாக்கி முழங்கி மின்னிப் பெய்து நிறைக்கும் பொருட்டுக் கவிமழை பொழிவதற்காக இந்தக் காளமேகம் புறப்பட்டது என்பது இதன் பொருள்.

### திருமலைராயன் புகழ்

இந்திரன் கலையாய் என்மருங்(கு) இருந்தான்
அக்கினி உதரம்விட்(டு) அகலான்
எமன்எனைக் கருதான் அரன்எனக் கருதி
நிருதிவந்(து) என்னைஎன் செய்வான்
அந்தமாம் வருணன் இருகண்விட்(டு) அகலான்
அகத்(து) உறு மக்களும் யானும்
அனில மதாகும் அமுதினைக் கொள்வோம்
யார்எனை உலகினில் ஒப்பார்
சந்ததம் இந்த வரிசையைப் பெற்றுத்
தரித்திர ராசனை வணங்கித்
தலைசெயும் என்னை நிலைசெய் கல்யாணிச்
சாளுவத் திருமலை ராயன்
மந்தர புயனாம் கோப்பயன் உதவும்
மகிபதி விதரண ராயன்
வாக்கினால் குபேரன் ஆக்கினால் அவனே
மா(சு)இலா ஈசன்ஆ வானே.

காளமேகம் இதனை இயற்றினார் எனத் தமிழ் நாவலர் சரிதை கூறும். சில மாற்றங்களுடன் சொக்கநாதப் புலவர் இயற்றினார் என்பாரும் உளர். இப்பாடல் திருமலைராயனைக் குறிப்பிடவில்லை. சாளுவக் கோப்பையன் மகன் திப்பையராயனைக் குறித்துப் பாடப் பெற்றதாகவும் சொல்லுவர். காளமேகம் பாடியதாகவே கொள்ள இடமுண்டு: திருமலை ராயன் என்ற பெயரே இப்பாடலில் வந்திருப்பதால் இவ்வாறு எண்ண இடமுண்டு. இப்பாட்டின் பொருள் கீழ் வருமாறு

புலவரின் ஆடை ஓராயிரம் பொத்தல்களை உடைத்து. அதாவது இந்திரனுக்கு ஓராயிரம் கண்கள் இருப்பது போல. அதனால் இந்திரனே ஆடையாக மாறி என் இடையில் இருந்தான். வயிற்றிலோ பசித்தீ. அதனால் அக்கினிக் கடவுள் என் வயிற்றை விட்டு அகலான். சிவபெருமான் நான் என நினைத்து எமனும் என்னை நினைக்க மாட்டான் (சிவபெருமான் ஒரு சமயம் பிச்சை எடுக்க நேரிட்டமையால் பிச்சாண்டி எனப்பட்டான். அதுபோல நானும் பிச்சாண்டி. ஆதலால் எமன் சிவன் என எனை நெருங்கான்) நிருதி என்று சொல்லப்பெறும் காற்றும் என்னை என்ன செய்து விடுவான்?(உடல் மெலிவு காரணமாகக் காற்று எனை ஒன்றும் செய்யாது என்பது பொருள்) வருணன் என்னுடைய இருகண்களை விட்டகலான். (புலவர் கண்கள் அடிக்கடி நீர்சொரிவதால் வருணன் என்னை விட்டு அகல மாட்டான் என்று புலவர் கூறுகிறார்).

என் வீட்டில் தங்கியுள்ள என் மக்களும் யானும் காற்றாகிய அமுதத்தையே உணவாக உண்போம். எனக்கு ஒப்பாவார் உலகிலே எவருளர். இத்தகைய சிறப்பினால் எந்நாளும் தரித்திர வேந்தனை வணங்கி வாழும் என்னை நிலையான கலியாண குணங்களை உடைய சாளுவத் திருமலைராயன் என்பவன் மந்தர மலைபோன்ற புயங்களை உடையவன் புலவர்களுக்கு உரிய மரியாதைகளை அளித்து உதவும் குணம் மிக்க இராமனைப் போன்றவன். தன் வாக்காகிய ஆணையால் குபேரனைப் போன்ற செல்வன் ஆக்கினான். அவனே எனக்குக் கடவுள் ஆவான்.

*(தொடரும்....)*

# திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

## செய்ந்நன்றி அறிதல்

*தனக்குப் பிறர் செய்த நன்மையை மறவாதிருத்தல்*

**1. செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.**

செய்யாமல் - தான் பிறருக்கு உதவி செய்யாத நிலையில்; செய்த உதவிக்கு - தனக்குப் பிறர் செய்த உதவிக்கு; வையகமும் - இந்தப் பூவுலகத்தையும்; வானகமும் - வானுலகத்தையும் ; ஆற்றல் அரிது - கைம்மாறாகக் கொடுத்தாலும் ஈடாதல் அரிது.

தான் பிறருக்கு உதவி செய்யாத நிலையில் தனக்குப் பிறர் செய்த உதவிக்குக் கைம் மாறாக இந்தப் பூவுலகத்தையும் வானுலகத்தையும் கொடுத்தாலும் ஈடாதல் அரிது.

வையகமும், வானகமும் - உம்மை உயர்வு சிறப்பு உம்மை

**2. காலத்தி னால்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.**

காலத்தினால் செய்த நன்றி - தேவைப்படுகின்ற தக்க நேரத்தில் ஒருவர் செய்த நன்மை ; சிறிது எனினும் - சிறிய அளவினதே ஆயினும்; ஞாலத்தின் - நிலவுலகத்தை விட ; மாணப் பெரிது - மிகவும் பெரிதாகும்.

தேவைப்படுகின்ற தக்க நேரத்தில் ஒருவர் செய்த நன்மை அளவில் சிறிதானாலும் இந்த உலகத்தை விட மிகவும் பெரியதாகும்.

காலத்தினால் - உருபுமயக்கம்.

**3. பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலின் பெரிது.**

பயன்தூக்கார் - பயனைக் கருதாமல் ; செய்த உதவி - ஒருவர் செய்த உதவி ; நயன்தூக்கின் - நலனைப் பற்றி ஆராய்ந்தால் ; நன்மை கடலின் பெரிது - அதனால் விளையும் நன்மை கடலைவிடப் பெரியதாகும்.

தனக்கு ஒரு பயனையும் கருதாமல் ஒருவர் செய்த உதவியின் நலன்களை ஆராய்ந்தால் அதனால் விளையும் நன்மை கடலை விடப் பெரிதாகும்.

செய்த - பெயரெச்சம் ; கடலின் - இன் உவம உருபு.

4. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்.

தினைத்துணை - தினை அளவு ; நன்றி செயினும் - நன்மை செய்தாலும் ; பனைத்துணையாகக் கொள்வர் -பனை அளவாகக் கருதுவர்; பயன்தெரிவார் - அந்த நன்மையின் பயனைத் தெரிந்தவர்.

செய்யப்படும் நன்மையின் பயனைத் தெரிந்தவர்கள் தினை அளவே சிறிய நன்மை செய்தாலும் அதனைப் பனைஅளவு பெரிதாகக் கருதுவார்கள்.

5. உதவி வரைத்தன்று உதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

உதவி - தான் பிறர்க்குச் செய்யும் உதவி ; வரைத்தன்று உதவி - இவ்வளவு என்ற வரையறை உடைய உதவியன்று ; உதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து - அந்த உதவி யாருக்குச் செய்யப்பட்டதோ அவருடைய சால்பின் அளவைப் பொறுத்தது.

தான் பிறருக்குச் செய்யும் உதவியின் அளவு இவ்வளவு என்ற வரையறை உடையது அன்று ; அந்த உதவி யாருக்குச் செய்யப்பட்டதோ அவருடைய சால்பின் அளவைப் பொறுத்தது.

6. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு.

மறவற்க மாசற்றார் கேண்மை - குற்ற மற்றவர்களோடு கொண்ட நட்பை மறக்கக் கூடாது ; துறவற்க துன்பத்துள் துப்பாயார் நட்பு - துன்பம் நேர்ந்த காலத்தில் வலிய துணையாக நின்றவரின் நட்பினை விட்டு விடக் கூடாது.

குற்றமற்றவரோடு கொண்ட நட்பினை மறக்கக் கூடாது ; துன்பம் நேர்ந்த காலத்தில் வலிய துணையாக நின்றவரின் நட்பினை விட்டுவிடக் கூடாது.

மறவற்க ; துறவற்க - வியங்கோள் வினை முற்றுக்கள்.

**7. எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தம்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு.**

எழுமை எழுபிறப்பும் - வினையால் எழுகின்ற ஏழுவகைப் பிறப்பிலும் ; உள்ளுவர் - நினைப்பார்கள் ; தம்கண் விழுமம் - தம்மிடத்தில் ஏற்பட்ட துன்பம் ; துடைத்தவர் நட்பு - நீக்கியவரின் நட்பினை.

தம்மிடத்தில் ஏற்பட்ட துன்பத்தை நீக்கியவரின் நட்பினை, தம்வினையால் எழுகின்ற ஏழுவகைப் பிறப்பிலும் நினைப்பார்கள் நன்றி உள்ளவர்கள்.

எழுபிறப்பும் – முற்றும்மை.

**8. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று.**

நன்றி மறப்பது – ஒருவர் செய்த நன்மையை மறப்பது ; நன்றன்று – அறமில்லை ; நன்றல்லது – அவர் செய்த நன்மையல்லாத தீமையை ; அன்றே மறப்பது நன்று - அப்பொழுதே மறந்துவிடுதலே அறன் ஆகும்.

ஒருவர் செய்த நன்மையை மறப்பது அறமில்லை; அவர் செய்த நன்மை அல்லாத தீமையை அப்பொழுதே மறந்து விடுதல்தான் அறமாகும்.

**9. கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன்று உள்ளக் கெடும்.**

கொன்றன்ன இன்னா - கொலை செய்தலைப் போன்ற துன்பத்தை ; செயினும் - ஒருவர் செய்தாலும் ; அவர்செய்த ஒன்றுநன்று -தமக்கு அவர் முன்னர்ச் செய்த நன்மை ஒன்றினை ; உள்ளக் கெடும் - நினைத்தால் அத்துன்பம் இல்லையாகும்.

கொலை செய்தலைப் போன்ற துன்பத்தை ஒருவர் செய்தாலும் தமக்கு அவர்முன்னர்ச் செய்த நன்மை ஒன்றினை நினைத்தாலே அத்துன்பம் இல்லாது நீங்கும்.

**10. எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.**

எந்நன்றி கொன்றார்க்கும் - எத்தகைய அறங்களாயினும் செய்யாது அழித்தவர்க்கும் ; உய்வுண்டாம் - பாவத்திலிருந்து நீங்கும் வழி உண்டாகும் ; செய்ந்நன்றி கொன்ற மகற்கு உய்வில்லை - ஒருவர் செய்த நன்மையை மறந்த மகனுக்கு (உய்வு) வழி இல்லை.

எத்தகைய அறங்களாயினும் செய்யாது அழித்தவர்களுக்கும் பாவத்திலிருந்து நீங்கும் வழி உண்டாகும். ஆனால் ஒருவர் செய்த நன்மையை மறந்த மகனுக்கு அந்த வழி இல்லை.

**பின் பக்க அட்டையில் -**

படம் 1 - ஏப்ரல் 2016 தேர்வுகளில் அழகப்பா பல்கலைக்கழக அளவில் B.Sc., கணினியியல் பாடத்தில் ஐந்தாம் இடம் பெற்ற மாணவி. எஸ்தர் கிரேஸ்

படம் 2 - ஏப்ரல் 2016 தேர்வுகளில் அழகப்பா பல்கலைக்கழக அளவில் B.Sc., கணினியியல் பாடத்தில் ஆறாம் இடம் பெற்ற மாணவி. நவலெட்சுமி

படம் 3 - ஏப்ரல் 2016 தேர்வுகளில் அழகப்பா பல்கலைக்கழக அளவில் B.B.A., பாடத்தில் ஆறாம் இடம் பெற்ற மாணவி. ராதா

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

